உ

ஸ்ரீ சிவபெருமான் துணை.

# இளையான்குடி ஸ்ரீ மாறநாயனார் புராணம்

இது

பாடியது

ஸ்ரீ சிவானந்த ஞானதேசிக சுவாமி அவர்கள் வேதாந்தமடம்



சிவமயம்.

# ஸ்ரீ மாறநாயனார் சரித்திரம்.

இது

இளையான்குடி வேதாந்த மடத்தின் குரு முதல்வர்
ஸ்ரீலஸ்ரீ சிவானந்த ஞான தேசிக சுவாமியவர்களால்
இயற்றப் பெற்றது.

## முகவுரை.

இன்னில வரைப்பின் மேலா வியம்புறு பாண்டி நாட்டில்
மன்னிய விளசை யொன்றும் மாறனும் வதிந்த திந்த
நன்னகர் தன்னில் மாறன் நலம்பெற வாழ்ந்து ஈசன்
தன்னிகர் சரணம் சார்ந்த தகைமிகு சரிதமீதே.

திருவளர் பாண்டி நாட்டில் மருவளர்சோலை சூழ்ந்து குருமணி மாடநீடி எழில்வளம் மல்கி யோங்கும் இயல்புறு பெரும்பதி இளசையம் பதியே இன்னம் திருமகட்குச் செந்தாமரைக் கூடமே திருமால் மருமகட்கு வெண்டாமரை மாடமே ஞானந் தருமகட்கு யோகத் தனிப் பீடமே தரையாம் பெருமகட்கு அணிதிலகமே ஆனதும் இப்பதியே.

இத்திரு நகருறை உத்தம மாறன், சத்திய ஞான அனந்த ஆனந்த, வித்தக வேதவிரி சிரப் பொருளான் மத்தமும் அரவும் வானதி பிறையும் வைத்திடு சடிலன், மரகதவல்லி மருவொரு பாகன், தத்துவ வித்துகள் சங்கட மகற்றும் மெய்த் திருப்பரமனும்

ஸ்ரீ இராஜேந்திர ஜோதீஸ்வரநாதருக்கும் ஸ்ரீ ஞானும்பிகா பரமேஸ்வரிக்கும் ஆலயமாதிய சாலவும் இயற்றி அன்புறு மனமும் இன்புறு தாரமும் மன்பெருஞ் செல்வமும் பொன்பெறப் பெற்றனர். அதனுல் அடியர் மாதவர்க்கு அன்னமும் பானமும் அன்புறு பொருளும் வேண்டிய மேண்டியாங்கு ஆண்டவனருளால் வழங்கியே வந்தனர்.

இன்ன தன்மையினை எம்பிரான் கருதி மன்னிய மாறன் வறுமைநோய் சேரத் தன்னது உள்ளத்து தயவுடன் நினைத்தான்.

வான் மாறினும் மொழி மாருத மாறன் படைத்துள செல்வமெல்லாம் பகல்மதி யாயிற்றந்தோ, அந்நிலை தன்னிலும் அடியார் பக்தி அகத்தை

விட்டு மாறிற்றில்லை. இருக்குமோர் வீட்டினுக்கு இசைந்திடு கூரையில்லை. படுக்க நற்பாயும் இல்லை. பசிக்கு நற்சோறுமில்லை. பரமனுக்கடியார் மாட்டுப் பக்தியே நிறைந்த துள்ளம்.

இந்நிலை தன்னை இறையவன் ஓர்ந்து இன்றே மாறன் இல்லிடைச் சேர்ந்து அன்னவற்கு முத்தி அளித்து மீளுவ னென்னத் தன்னுளந் தன்னில் தயாநிதி நினைத்து அடைமழை தானும் அடைத்து நீர்பொழிய ஆவணிமாசம் மகநக்ஷத்திரத்தில் அர்த்த ராத்திரியில் அரும்பசிக் கன்னம் அடைவுடன் தருவாய் அன்பனே என்று மாறன் மனைசென்று மகாதேவன் கேட்டான். அனைய வாசகத்தை மனைவியோ டளாவி, அடியரே வாரும் அன்புடன் அமரும் இனிய நல்லமுதம் இன்புடன் தருவோம்

எனப் பலமுகமன் இன்புடன் கூறி நென் முளைவாரி
இன்னமு தருத்தி நேரிலா முத்தி பேறதாய்ப் பெற்றார்.
இளையான் றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்.

இந்தச் சரித்திரத்தைச் சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் சில பிரதிகளைப் பார்த்தும் சில பெரியோர்கள் கர்ன பரம்பரையைக் கேட்டும் செய்யுள் வடிவத்தில் செய்துள்ளேன். மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் திருப்பனந்தாள் சந்நிதானம் ஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமியவர்கள் அனுமதி பெற்றுக் குமரகுருபரன் பத்திரிகையில் பிரசுரிக்கப் பட்டது.

இப்போது ஸ்ரீமான். கு. ச. பிச்சைமாணிக்கம் செட்டியாரவர்கள் ஷஷ்டியப்த பூர்த்தி வைபவ ஞாபகார்த்தம் ஷெயாரவர்கள் பொருளுதவியால் அச்சுவாகனம் ஏற்றிப் புத்தக வடிவத்தில் அனைவருள்ளமும் கண்டு களிகூர உலாவி வருமாறு செய்யப்பெற்றது. இதில் பிழையுளதேல் பெருமான் கருணை, பேருலக அன்பு பொறுத்தருள் புரிக!

சாந்தி! சாந்தி!! சாந்தி!!!



சிவமயம்.

# இளையான்குடி, ஸ்ரீ மாற நாயனர் புராணம்.

இஃது
இளையான்குடி வேதாந்தமடம்
இராமேஸ்வரம் சிவாஸ்ரமம்
*இவற்றின் ஸ்தாபகரும் தலைவரும் ஆன*
**ஸ்ரீ சிவானந்த ஞான தேசிக சுவாமியவர்களால்**
*பாடப் பெற்றது.*

## ஸ்ரீ சொருப வணக்கம்

*சத்திய சித்கன சாஸ்வத சாந்த*
*அத்வைத மோன அகண்டறி வான*
*நித்திய வக்ஷர நின்மல ரூபம்*
*புத்தியி னித்தியம் போற்றுதல் செய்வாம்* 1

## ஸ்ரீ சர்வ மூர்த்தி வணக்கம்

கரிமுக னறுமுகன் கௌரிமா லயனரன்
பரிதிவிண் ணவர்பதி பங்கய விறைவியர்
திரிபறு விண்ணவர் சித்தவிஞ் சையர்பதம்
புரியுமிந் நூல்பெறப் போற்றுகின் றேனே. 2

## ஸ்ரீ பஞ்ச மூர்த்தி வணக்கம்

அருமறை யடியொரு வாகம தாகிய
கரிமுக வரதனைக் கந்தனை யுமையை
அரியய னமரரொ டனைவர்த மிறையைத்
திரிபறு குரவனைச் சிந்தனை செய்வாம். 3

## ஸ்ரீ அருளிறை வணக்கம்

என்னை யாண்டவன் கானப்பேர் வாழ்ந்திடு மிறைவன்
முன்னை ஞானத்தை மொழிந்திடும் முனிவர்க்கும்
முதல்வன்

• • • •

அன்னை போன்றெனை யனுதினம் காத்திடு மையன்
தன்னைத் தானருள் தயாபர செல்லப்ப நாதன் 4

## அவையடக்கம்

மெய்யுணர் சேக்கிழார் விரித்த விக்கதை
மெய்யுணர் சிறுவனுன் விரிக்கும் விந்தைதான்
மெய்யுணர் தபனனுல் விளக்கு மேதினி
மெய்யுணர் மின்மினி விளக்கல் மானுமே. 5

இளசையில் வாழ்ந்து மாற னிறையன்பர் பக்தி பூண்டு
வளமலி கங்கை வேணி மகதேவர் பதம டைந்த
அளவிலாக் காதை தன்னை யன்பர்கள் விரும்பிக் கேட்க
வுளமகிழ்ந் துரைத்தே னித்தை யுத்தம ருவந்து
கொள்வார் 6

இப்பெருங் கதையை முன்னோ ரெழுதிய சுவடி பார்த்தும்
செப்பரும் பெரியோர் கர்ன பரம்பரை செவியிற் கேட்டும்
தப்பறுங் கல்வெட் டுக்கள் சார்ந்துள விடம றிந்தும்
செப்பின னிதனை யித்தைத் தெரிந்தவ ருவந்தி டாரோ. 7

கனிமொழி யுமையாள் பாகற் கண்ணளெங் குளிருந் தொண்டர்க்
கினியன பகர்ந்து செய்யு மிளசைவாழ் மாற வெந்தாய்
இனிமையாம் பொருளுஞ் சொல்லு மியைந்திடாச் சிறுவனேனும்
தனிமையாம் நினது கீர்த்தி சாற்றினே னேற்றுக் கொள்ளே 8

## காப்பு

அத்திமா முகனே போற்றி அறுமுக வேலா போற்றி
சத்தியா முமையே போற்றி சங்கரா போற்றி யெங்கள்

சத்திய குருவே போற்றி சங்கம பத்தி செய்து
சத்திய முத்தி மாறன் சார்கதை யுரைப்ப தற்கே. 9

## நாட்டுச் சிறப்பு

பூமகன் படைப்பின் மேலாம் பூவுல கதனின் மேலாங்
கோமகன் பரத னுண்ட குவலய மத்தின் மேலாந்
தேமகன் காவி னஞ்சூழ் திருப்பாண்டி நன்னாடு அத்தை
மாமக னன்றி நம்மால் வகுக்கலாந் தகைமைத் தாமோ. 10

தடாதகை யாகி யம்மை தனியர சளித்த நாடு
சடாதரன் மாற னாகித் தனிக்குடை நிழற்று நாடு
படாதவேற் குமரன் பாண்டி யரசனாய்ப் பரித்த நாடு
கெடாதிதன் பெருமை தன்னைக் கிளத்துன ருலகில் யாரே. 11

## நகரச் சிறப்பு

இப்பெரு நாட்டில் வைகை யியல்வட கரையின் மேய
செப்பரு மிளசை நல்லூர் செழுமி ளையான்
குடியென்
ஞெருப்பறும் நாமம் பூண்ட வுயர்பதி யுளதாம் அங்கு
முப்புர தகனன் மாயன் மூர்த்திநீர் தலமு
முண்டால். 12

இப்பதி தன்னி லோர்கா லிந்திர னவத ரித்துத்
தப்பித மனைத்தும் நீக்கித் தவம்பல பகலி ழைத்துச்
செப்பிய தன்பே ராலே தீர்த்தமும் மூர்த்தி கண்டு
கப்பிலாப் பூஜை செய்து கதிதனை நண்ணி னுல். 13

கோதமன் மரீசி முன்னுங் குலமுனி வசிட்ட ரோடு
மேதமில் கவுசி கப்பே ரியன்முனி புலத்தி யன்ருன்

கோதறு சவுன காதி குறைவறு முனிவர் மன்னர்
மாதவ மியற்ற முன்னாள் வதிந்ததிப் பதியென்
பாரே. 14

வில்வத்தின் வனமா மித்தை விரிவுறக் கூறக்
கேண்மின்
எல்கையோர் காத தூர மெழிலுறு வகல நீளம்
அல்கள னுறையுங் கோயி லம்பதி னென்று மாயன்
தொல்பதி பதினெட் டாகும் தொண்டர்தம் மடமீ
ராறே. 15

அத்தியின் வத்தி ரர்க்கு ஆலயம் நூற்றெட் டாகும்
சத்திவே லவர்க்கி ரெட்டாஞ் சத்தியா லயம்பன்
னென்றும்
சத்திர மூவா றுகுந் தர்மசா லையுமீ ரேழாம்
மெத்திய பாடசாலை வியப்புற வீரைந் தாமே. 16

கோமடம் பதினொன் றுகுங் கோலமா மடமு மேழாம்
தேமலர்க் காவி னங்கள் சிறப்புற விருபத் தொன்றும்
பூமரு சிறுவர் கற்கும் புகழ்ப்பள்ளியிருபத் தைந்தாம்
காமரு ராஜ வீரர் கற்குஞ்சா லையுமோ ரைந்தே. 17

மறையவர் தெருவும் ராஜ மன்னவர் வீதி தானும்
நிறையுறும் வணிகர் வேளாண் நீள்மறு களவி
லாதாம்
இறையவர்க் கெல்லிற் கங்கு லியலறு காலந் தன்னில்
மறைகளா கமத்திற் சொன்ன வழிமுறை பூஜை
யாமால். 18

### நாயனாரின் சிறப்பு

மதுரையம் பதியின் மேய மாறனும் பாண்டி யற்கு
விதிமுறைக் கணக்க ராயும் விபுதராம் புலவ ராயும்

மதிபெறு மமைச்ச ராயும் மாண்பொருட் டலைவ
ராயும்
வதிதலா லித்த லத்தில் மாறன்கோத் திரமொன்
றுண்டு. 19

கள்ளாமை கள்ளுண் ணமை காமத்தைக் கடந்து
நிற்கை
யெள்ளாமை கொலைசெய் யாமை யிகழ்புலா லுண்ண
லின்மை
தள்ளாமை யுலகைப் போற்றுந் தாளாண்மை
வாய்மை செம்மை
வெள்ளாண்மை முதலாக் கொண்ட வெள்ளாளர்
குலத்து ளாமே. 20

இத்தகை மாண்பு மாற னியலுடைக் குலத்து
வந்தோன்
சத்தியந் தருமம் தானம் தயைபொறை யடக்கந்
தூய்மை
வித்தைநல் வினயங் கேள்வி விண்ணவர் பூஜை
நோன்பு
பத்தர்க ளுறவு மேலாம் பண்பெலா முருவ
மானோன். 21

ஏகமா யசல மாகி யெங்கணு நிறைந்த தாகி
நாகமு மண்ணுங் கீழும் நாடொணுப் பொருள தாகிச்
சோகமா மனத்திற் கெட்டாச் சுயஞ்சோதி யான
வொன்றை
யோகமாய் மனதிற் காணு முத்தம தவத்த
ஞேன். 22

இந்திர போக மென்ன வியனலம் பலவா யுள்ளோன்
சந்திர மாறன் றந்த தவமகன் தூய ராஜ
இந்திர மாறன் என்போ னிளமையிற் கலைகள் கற்றுச்
சுந்தர வதனி ஞானம் பிகையினைத் துணையாய்க்
கொண்டான். 23

அருமறைக் கிழவர் மேலா மடியவர் சிவவே டத்தார்
திருமுறை பாடு வோர்கள் சித்தத்தைச் சிவன்பால்
வைத்தோர்
தெருண்மிகு சிவஞா னத்தார் தேசிகத் தன்மை
பூண்டோர்
ஒருவரு மொழியா தெங்க ளுணவையே யுண்ண
வாரீர். 24

என் றுமே பறைகள் சாற்றி யிருபோது முணவ
ளிப்பார்
துன் றிய பிரம சாரர் துறவிகள் வனவா சத்தார்
தென் றிசை யுள்ளா ரொக்கல் தெய்வந்தான்
விருந்தி னர்க்கும்
ஒன் றவே யுபச ரிப்பா ருறுதுணை யறவோர்க்
காவார். 25

இன்னவா றிளசை மாற னில்லாளுந் தானும் நேர்ந்து
நன்னய வீசன் தொண்டர் நாடிய வனைத்துஞ்
செய்தார்
மன்னவர் வணங்குங் கீர்த்தி மாறன தியற்கை
யன்பை
கன்னல்வே ளெரித்த தேவன் கருதினா னுளத்திற்
றனே. 26

அளகைக் கோனிகர தான வருஞ்செல்வ வமயத்
துற்ற
வளமையி னன்றி மற்றை வறுமைநாள் வந்த
போதும்
உளமிவ னடியர் மாட்டு வுதவலும் வல்ல ஞேவென்
றுளமதில் வறுமை சேர வுன்னிஞ ருளமு வந்தே. 27

பல்வளச் செல்வ மெல்லாம் பகல்மதி யணைய தாக
அல்கல னடியார் பக்தி யரன்வழித் தொண்டு பூஜை
பல்பகல் வறுமை யுற்றும் பரமன தடியார்க் காணின்
பல்கடன் பட்டும் போற்றும் பக்தியில் மாருன்
மாறன். 28

என்றுமே சிவவே டத்தார்க் கென்னுடைச் செல்வ
மென்றே
யொன்றிய வனைத்துந் தொண்டர்க் குண்மையாய்த்
தானம் செய்தார்

துன்றிய வறுமை யுற்றுந் துறவரை யறச்சோ
றேற்றும்
என்றுமே போற்ற வல்லா ரிவர்பக்தி யியம்ப
லாமோ. 29

தனக்குள விலமோ சிற்றில் தரித்திர மதிக மாகும்
கனக்குறு பசியை மாற்றக் கருத்தொரு வகையு
மில்லை
மனைக்குநற் கூறை யில்லை மறுதுணி யுடுக்க வில்லை
மனக்கணி லடியார் பக்தி மட்டுமே குறைவின்
றுமால். 30

பக்தியை யடியார் போற்றும் பரதேவ னுளத்தி
னோர்ந்து
இத்தின மிளசை சென்று வியன்மாற னடையு மாறு

சத்திய முத்தி யீந்து சாருவ னென்று போந்தான்
மெய்த்தவ வேடத் தோடு மேவிய வவன்ற
ணில்லம். 31

அடைமழை யடைத்துப் பெய்ய வர்த்தராத்
திரியில் வந்து
கடுகிய பசியால் மெத்தக் களைத்தனன் களைகண்
காணேன்
உடனிதை மாற்றி லீரே லுயிர்போகும் பழியு மக்கே
கடனென வுரைத்தா னந்தக் கருணைவா ரிதியே
யன்ஞன். 32

ஆரவே ணியர்தம் அன்ப வடிசில்நா மமைத்த
ளிப்போ
மீரமே னியில கற்றி யிவ்விடத் திருத்தி யென்று

தாரமா திடத்து நண்ணித் தாபதர் நிலைமை கூறிக்
காரமர் குழலாய் செய்யுங் காரணங் கூறு
கென்றார். 33

நாமினிச் செய்வ தென்னே நமர்பிறர் துணையு மில்லை
சாமமு மிரண்டா யிற்று சங்கட மெதுவு மின்றி
நாமுனம் விதைத்த நெல்லை நல்கினு லடிசில் செய்வே
னேமுற விதனை யன்றி யென்செய் வேனைமை
யென்றாள். 34

நன்மொழி புகன்று யென்று நாயனர் வயலிற்
சென்று
நென்முளை வாரி வந்தார் நேரிழை யெதிர்சென்
றேற்றுச்

செங்நெலிற் சேறு நீக்கித் தீமூட்ட விறகில் லென்னத்
தன்மனை யலக்கை யீர்த்துத் தந்தன ரதனைக்
கொண்டும். 35

வெறுத்துநல் லரிசி யாக்கி வாய்த்தநல் லுலையிற் பெய்து
சுறுக்கினிற் சமையற் செய்தும் தொடுகறிக்
கடியார் தந்த
வெறுப்பிலாப் பயிர்கள் தன்னை விதவிதங் கறிகள்
செய்தும்
மறுத்திடாக் கற்பி னல்லாள் மகிழ்நருக் கறிவிப்
பானே. 36

தலைவர்முன் தலைவி யெய்திச் சமைத்தநல் வகைகள்
காட்டி
நிலைபெறு தவரை யுன்ன நேர்மையா யழைமி
னென்றாள்

நலமெனச் சென்று தூங்கு நற்றவர் துயிலை நீக்கச்
சொலவொணுச் சோதி ரூப மாகவே தோன்றி
ஞரே. 37

நீதிலாச் சோதி கண்டு திகைத்திரு வருமே நின்ருர்
ஆதியா னிடப மீதில் அம்பிகை யுடனே தோன்றக்
கோதிலாக் காட்சி கண்டு குறைவற நிறைந்த பக்தர்
சோதியே தூய ஞானச் சுடர்மணி விளக்கே
போற்றி. 38

கருணையங் கடலே மேலாங் கதிதரு நிதியே போற்றி
வருணனை தனக்கெட் டாத வருணனே போற்றி
ஞானம்
அருணனி யெமக்கு நல்க அடியரே மில்லம் வந்து
தருணமீ தெமக்குக் காட்சி தந்தசங் கரனே
போற்றி. 39

எண்ணரும் மறைகள் போற்றும் ஏகனே போற்றி
ஞானப்
பெண்ணொரு பாகம் கொண்ட பெருமனே போற்றி
மால்முன்
விண்ணவர் தமக்குங் காணா விகிர்தனே யுன்னை
யாங்கள்
கண்ணினாற் காணப் பெற்றோம் கதியிதன் மேலும்
உண்டோ. 40

என்னவே துதித்து நின்ற இயல்பரை இறைவ னோக்கி
என்னருந் தொண்டர் வேண்டு மியல்பெலா
மிசையச் செய்தீர்
உன்னரு மனதிற் கேற்ற வுறுவரங் கேண்மி
னென்னத்
தன்னக மகிழ்ந்து நோக்கித் தம்பதி பகர்வ
தானார். 41

அல்லிருங் களத்தோ யெங்க ளருவினைக் கீட தாக
எல்லையி லாத சென்ம மெத்தனை எடுத்திட் டாலும்
செல்வமும் வறுமை தானுஞ் சிந்தையைக் கலக்கி
டாமல்
நல்லநின் னன்பர்ப் போற்றும் நன்மையே யெமக்கு
வேண்டும். 42

அடியவர் தம்மைப் போற்ற அரும்பெருந் தனமு
மன்னுர்
அடிதனக் கேவல் செய்யும் ஆக்கையு மவர்க ளுள்ளப்
படியறிந் தொழுகு நல்ல பண்பம ராவி மூன்றும்
அடியரேந் தமக்கு நல்கி ஆண்டருள் புரிவா
யெந்தாய். 43

என்றவர் கேட்ட வெல்லா மியல்பெற அளித்து
மேலாம்
மன்றலங் கொன்றை வேய்ந்த மகிபனும் மகிழ்வி
னோடும்
இன்றிந்த வுடம்பி னோடு மியலுபல் வளமும்
பெற்றுத்
துன்றுநும் மனதிற் கேற்ற தொண்டெலா மாற்றிப்
பின்னர். 44

இப்பெரு முடலை நீத்து என்றனிக் கணங்கள் சூழ
வொப்பிலாச் சிவிகை யூர்ந்து வுத்தம பதங்கள்
கண்டு
செப்பரும் முனிவர் தேவர் சித்தர் விஞ்சையர் கருடர்
எப்பெருந் தவருங் காண என்பெரு முலகம்
வாரீர். 45

அன்பரா யுள்ளீர் கேளீர் அருமறை முடிவ தான
என்பெரு முலக மெய்தி யிருநிதிக் கிழவன் ருனே
தன்பெரு நிதிய மேந்தித் தனிப்பெரு மேவல் செய்ய
வின்பமார்ந் திருப்பீ ரென்றே யிசைத்தொளி யாகிச்
சென்ருன். 46

சென்றுள விறைவன் சொன்ன செயலினை யுளத்தி
லோர்ந்து
தன்றனி நகரில் மேலாந் தனமுனை நாட்போற்
பெற்று
என்றுமே தொண்டர் பூசை யினிதுறப் போற்றி
வாழ்ந்தே
அன்றரன் சொன்ன வாபோ லடைந்தனர் கைலை
லோகம். 47

பரம்பர னுலக மெய்திப் பல்பெரும் போகந் துய்த்துத்
திரம்பெறு ஞானம் பெற்றுச் சீவன்முத் தருமே
யாகிச்
சரம்பெற அவனு னில்லாச் சாஸ்வத முத்தி பெற்றூர்
நரசுர வுலக முற்ருேர் நாடிடும் பதமீ தாமே. 48

இப்பெருங் கதையைக் கையா லெழுதினோர் படித்து
ளோரும்
மெய்ப்படச் செவியிற் கேட்க மேவிய தொண்டர்
யாரும்
செப்பிய விளசை மாறன் செயலினி லினிது சேர்ந்தே
அப்பணி சடிலத் தெம்மான் அடியிணை சேரு
வாரே. 49

அக்ஷய வருடந் தன்னில் ஆவணி மகமா நாளில்
தெக்ஷண பாண்டி நாட்டிற் சிவகெங்கைச் சமீனைச்
சேர்ந்த
பக்ஷமா மிளசை வந்து பாடினன் மாறன் காதை
தக்ஷண யிளசை மேய தனிச்சிவா னந்தன் றானே. 50

வாழிநல் விளசை மாறன் மனமகி ழீச னன்பர்
வாழிநல் விளசை மாறன் வழிவழி மரபு வந்தோர்
வாழிநல் விளசை மாறன் மலரடிக் கன்பு செய்வோர்
வாழிநல் விளசை மேவும் மன்பதை யனைத்துந்
தானே. 51

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ இளையான்குடி குழ. கேசவன் செட்டியாரவர்கள் பாடிய வழிவிடு சித்திவிநாயகர் பாமாலையில் உள்ள சில பாடல்கள்

அறுசீர் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அங்கயற் கண்ணியீன்ற அரும்பரம் பொருளே
யெங்கள்
சங்கரன் புதல்வா அப்பா தனிப்பெருந் தலைவா
நாங்கள்
மங்கள மாக வாழ மனமது வைத்து வுன்றன்
பங்கயப் பாத மீந்தெம் பவமதை தடுத்தாட்
கொள்ளே.

உந்தனை நினைந்தி டாமல் உலகவாழ் வதனை
யென்றும்
சிந்தையில் நினைந்து நாங்கள் சீர்குலை வதனை நீத்துப்
பந்தமாம் இருளை நீக்கிப் பரகதி கொடுக்குந் தேவா
எந்தனைக் காத்துன் பாதம் என்றுமே யருள்செய்
வாயே.

ஔவியம் நிறைந்த யெங்கள் ஆணவ கன்ம மாயை
செவ்விதிற் போக்க வுன்றன் சீர்பத மிறைஞ்சு
கின்றோம்
கௌவிய தீயோ ரென்று கருத்தினி னினைத்தி
டாமல்
பௌவிய மான வுன்றன் பதமதை யருள்செய்
வாயே.

